# நகரத்தார் இதழ்

## திரை உலக இதழ்

(இது ஒரு நன்கொடை இதழ்)



திரை உலக அரசர்
ஏ. வி. மெய்யப்ப செட்டியார்



கவியரசர்
கண்ணதாசன்

ஏப்ரல்-1989
(சுக்ல-சித்திரை)

ஆசிரியர்: சுப. செந்தமிழன்

மக்கள் தலைவர் எம். ஜி. ஆர். அவர்களும் கம்பர் அடிப்பொடி சா. கணேசனர் அவர்களும்

---

ஓம்
தாய் தீப்பாய்ந்தாளுக்குவணக்கம்
தமிழ் அன்னைக்கு வணக்கம்

# நகரத்தார் இதழ்


மலர்: 2  இதழ்: 11



ஆசிரியர்:
சுப. செந்தமிழன்
எண் 8, ராசசேகரன் தெரு
(நீதிமன்றம் பின்புறம்)
சிவகங்கை - 623560
பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம்


## ஏப்ரல் - 1989
(சுக்ல—சித்திரை)

நன்கொடை
தனி இதழ் ரூ. 2/-

தமிழ்நாடே வாழ்க—எம்
தாய்நாடே வாழ்க-
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர் தழையும் விழுமிய தமிழ்நாடே
வாழ்க!

-புரட்சிக் கவிஞர்
பாரதிதாசனார்

# நாட்டரசன்கோட்டை

## தீர்த்தார்குளம் அருள்மிகு தேசிய விநாயகர்கோவில் திருக்குட நன்னீராட்டு விழா நிகழ்ச்சிநிரல்

சித்திரைமீ 15உ (28-4-89) வெள்ளி–யாகசாலைத்தொடக்கம்
,, 16உ (29-4-89) சனி —காலையாகசாலை
இரண்டாம் காலம்
மாலை - யாகசாலை
மூன்றாம் காலம்
,, 17உ (30-4-89) ஞாயிறு—காலை - யாகசாலை
நான்காம் காலம்
மாலை யாகசாலை
ஐந்தாம் காலம்
,, 18உ (1-5-89) திங்கள் —அதிகாலை–யாகசாலை
ஆறாம்காலம்,
பூரணமதி
காலை 7 to 7.30
அஷ்டபந்தனமகா
கும்பாபிஷேகம்

## நாட்டரசன்கோட்டை அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மன் கோவில் திருக்குட நன்னீராட்டு விழா நிகழ்ச்சி நிரல்:

சித்திரைமீ 12உ (25-4-89) செவ்வாய்— அனுக்ஞை பூசை
தொடக்கம்
சித்திரைமீ 13உ (26-4-89) புதன் —காலை 9 மணிக்கு
கணபதிபூசை
மாலை–வாஸ்து சாந்தி
சித்திரைமீ 14உ (27-4-89) வியாழன் —காலை–நவக்கிரக
ஹோமம்
மாலை-மிருந்சங்கிரணம்
சித்திரைமீ 15உ (28-4-89) வெள்ளி —யாகசாலை பிரவேசம்
சித்திரைமீ 16உ (29-4-89) சனி —காலை - மாலை
யாகபூசை
சித்திரைமீ 17உ (30-4-89) ஞாயிறு—காலை மாலை யாக
பூசை லட்சுமி பூசை
சித்திரைமீ 18உ (1-5-89) திங்கள் —9 மணிக்குதிருக்குட
நீராட்டுவிழா

# உங்கள் குரலே எமது தலையங்கம்
# அந்த உணர்வு நமக்கும் வேண்டும்.

"அகர முதல எழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றே உலகு" - தமிழ்மறை

மேற்கண்ட தமிழ்மறையுடன் 10—10—1951ல் மதுரையில் கலைத்தந்தை கருமுத்து தியாகராசன் செட்டியார் அவர்களால் தொடங்கப்பட்ட "தமிழ்நாடு" நாளிதழ் தொடர்ந்து வெளிவர முடியாமல் சில ஆண்டுகளில் நின்றுவிட்டது. தனித் தமிழில் வந்து அந்த இதழுக்கு கிடைத்த பலன் நட்டம் தான் ஆகும். இந்நிலைக்கு காரணம் என்ன? நம்மவர்கள் எல்லோரும் தமிழ்நாடு நாளிதழை வாங்கி மற்றவர்களுக்கும் அந்த இதழின் சிறப்பை எடுத்துக்கூறி வாங்கும்படி செய்திருந்தால் "தமிழ்நாடு" நாளிதழ் நின்றிருக்குமா? சிந்தித்துப் பாருங்கள். தமிழ்நாடு நாளிதழ் தொடர்ந்து வந்திருந்தால் நமது இனத்துக்கு மேலும் மேலும் பெருமைகளை அது சேர்த்துக் கொடுத்திருக்கும்.

இன்றைக்கு தமிழகத்தில் பல நாளேடுகள் வெளிவருகின்றன. குறிப்பாக ஒரு இனத்து நாளேடுகள் பொது நாளேடுகள் என்று கூறிக்கொண்டு தமது இனத்தைச் சார்ந்தவர்களின் முன்னேற்றத்திற்குத் துணை செய்யும் வகையில் செய்திகளை வெளியிட்டு வருகின்றது. அவர்களுடைய அந்த உணர்வு, இன ஒற்றுமை பாராட்டத் தக்கது. அந்த ஒற்றுமை, அந்த உணர்வு தமிழர்களாகிய நமக்கும் ஏற்படவேண்டும்.

தமிழர்களாகிய நாம் தமிழ் இன உணர்வுள்ள ஏடுகளையே வாங்கவேண்டும். நாமும், தமிழும் ஒன்றே என்பதை நாடேயறியும். தமிழுக்காக நம்மவர்கள் செய்துள்ள தொண்டுகளை தமிழ் வரலாறு எடுத்துக்காட்டும். குறிப்பாக நம்மவர்களுக்கு ஒன்றை கூறிக்கொள்ள விரும்புகின்றேன். சைவத்தையும், தமிழையும் தம் வாழ்வுடன் இணைத்துக்கொண்டு வாழும் நம்மவர்கள் தமிழ் உணர்வு மிக்க தமிழ் வளர்ச்சிக்கு துணைபுரியும் நாளேடுகளை வாங்கிட வேண்டும். தமிழ் உணர்வு மிக்க 'தமிழ்நாடு' நாளிதழ் நின்றதுபோல் மற்ற நமது ஏடுகளுக்கும் அந்த நிலைமை ஏற்படாது காத்திடவேண்டியது நமது பொறுப்பாகும். நமது இன ஏடுகள் வளர்ந்தால் தான் நமது இனம் நாட்டுக்கு செய்துள்ள சேவையை செய்து வருகின்ற சேவையை நாடறியும். அவர்கள் இனத்து ஏடுகளை அவர்கள் வளர்த்து அவர்கள் இனத்தவர்களை பெருமை மிக்கவர்களைப் போல் காட்டி தம் இனத்தை வளர்த்துக்கொள்கின்றனர். அந்த உணர்வு நமக்கு வேண்டும்.

J. சொக்கலிங்கம் (மதகுபட்டி)
வடக்கு ஆவணி மூலவீதி - மதுரை

# கலை உலகம்.

## நாடகம், நாட்டியம் சிறுவிளக்கங்கள்.

- கு.சா. கிருட்டிணமூர்த்தி

இயற்றமிழ்: இலக்கியமும், இலக்கணமும் அடங்கியது இயற்றமிழ்.

இசைத்தமிழ்: பண்ணொடு கூடிய் பாடல்களையுடையது இசைத்தமிழ்.

நாடகத்தமிழ்: கதையை, உரையாடல்களை அமைத்தும், பாடல்களை பாடியும் மெய்ப்பாட்டுடன் பிறருக்கு நடித்துக் காட்டுவது நாடகத்தமிழ்.

நாடகம்: நாடு+அகம்: நாட்டின் நிலையை தன் அகத்தே வெளிப்படுத்திக்காட்டுவது நாடகம். நாடகம் நாட்டின் இதயமாக [அகமாக]விளங்குகின்றது. காலத்தின் கண்ணாடி பாமரர்களின் பல்கலைக்கழகம். சமுதாயச் சீர்கேடுகளையும் வாள்வீச்சு. அகம் - நாடும், உள்ளம் - நாடு கலை நாடகமாகும். கற்பனை கருவூலம் உணர்ச்சிகளின் உயிர்த் துடிப்பு நாடகமாகும்.

கூத்து: நாடகமும் நாட்டியமும் சேர்ந்தது கூத்தாகும்.

நாட்டியம் குறிப்பிட்ட கருப்பொருளை மட்டும் அவயவங்களின் உணர்ச்சிபூர்வமான நடிப்பாற்றலால் விளக்கிக் காட்டும் ஆடற்கலையே நாட்டியமாகும். நாட்டியம்-நாடு + இயல் என்று பிரிந்து நாட்டின் இயலை பிரித்துக்காட்டும் கலை எனக்கூறலாம். நாடு + இயல் - நாட்டியல் ஆகி காலப்போக்கில் 'ல்' என்ற எழுத்து 'ம்' ஆக மருவி நாட்டியம் ஆக மாறியிருக்கலாம்.

---

தொலைக்காட்சிக்கு கண்டனம்: தமிழ் இன உணர்வு மிக்கவர்களை கேவலப்படுத்துவது தொலைக்காட்சியின் வாடிக்கையாகிவிட்டது. 23—3—89, 30—3—89 அன்று சென்னை தொலைக்காட்சி ஒலிபரப்பிய "நேற்றைய மனிதர்கள்" நாடகத்தில் நம்மவர்களை [நகரத்தார்களை] கேவலப்படுத்தும் வகையில் உரையாடல்களும் காட்சிகளும் அமைக்கப்பட்டிருந்தது கண்டிக்கத் தக்கது.

# அம்மா கொடுத்த அறை

## பிள்ளைப் பருவத்திலே! — தாமஸ் ஆல்வா எடிசன்

குழந்தைக்கவிஞர்
அழ. வள்ளியப்பா

பள்ளிச் சிறுவர் சிறுமியர்கள்
பாடிப்பாடி மகிழ்வெய்த
தெள்ளித் தெளித்த செந்தமிழில்
தேனார் கவிகள் செய்து தரும்
வள்ளியப்பா-

—கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை

மூதறிஞர் ராசாசி, கொத்தமங்கலம் சுப்பு, நாமக்கல் கவிஞர் மற்றும் பல சான்றோர்களாலும் புகழப்பெற்ற, பாராட்டப் பெற்ற குழந்தை கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள் தனது 67வது வயதில் 16—3—89 வியாழக்கிழமை யன்று மதுரையில் இயற்கை எய்தினார். அவர் பிள்ளை களின் முன்னேற்றத்திற்கு ஊக்கம் தரும் வகையில் வழி காட்டும் வகையில் எழுதியுள்ள கதைகள் அளவற்றவை. அக்கதைகளில் ஒன்றான "அம்மா கொடுத்த அறை" என்ற கதையினை வாசகர்களுக்கு தந்துள்ளேன். திரைப் படத்தைக் கண்டுபிடித்த எடிசனின் பிள்ளைப் பருவத்தில் நடைபெற்ற சுவையான செய்தியை சுவைப்பட எடுத்துக் கூறுகின்றது "அம்மா கொடுத்த அறை" என்ற தலைப்பில் அமைந்துள்ள கதை. வாசகர்களே படித்துப் பயன் பெறுங் கள்.

"பிள்ளைப் பருவமா! அப்படி ஒன்று அவனுக்கு இருப்பதாகவே தெரியவில்லையே! பெரிய மனிதன் போலவே எல்லாம் செய்து வருகின்றான்" என்று அவனு டைய அப்பா ஒரு முறை கூறினார். அது உண்மை தான் அவன் எப்பொழுதுமே ஏதாவது ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப் பான். அல்லது, இது என்ன? அது என்ன? என்று கேள்வி மேல் கேள்வி கேட்டுக் கொண்டிருப்பான்.

என்ன இவன் இந்த மாதிரி அர்த்தமில்லாத கேள்வி களையெல்லாம் கேட்கின்றானே ஒரு வேளை இவனுக்கு மூளைக் கோளாறாக இருக்குமோ என்று சந்தேகப்பட்ட னர். இவன் தலை பெரிதாக இருக்கின்றது. அதனால் மூளையில் ஏதாவது கோளாறு இருக்குமென்று டாக்டர்

கூடக் கூறினார். இதன் காரணமாக எட்டு வயது வரை அவனைப் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பவில்லை. அதன் பிறகே அவனைப் பள்ளியில் சேர்த்தார்கள்.

பள்ளியில் மூன்று மாதங்களே படித்தான். பிறகு அவன் படித்தது எல்லாம் வீட்டிலே தான். அவன் அம்மா அவனுக்கு ஆசிரியையாக இருந்து பாடம் சொல்லிக் கொடுத்தாள்.

பத்தாவது வயதில் அவனது வீட்டில் அவனே ஒரு சோதனைச்சாலையை ஏற்படுத்தினான். அவன் தெருத் தெருவாகச் சென்று நிறைய புட்டிகளைச் சேகரித்துக் கொண்டு வருவான். யாராவது அந்தப் புட்டிகளை எடுத்து விட்டால் என்ன செய்வது? அதற்காக நஞ்சு என்று எழுதி ஒவ்வொரு புட்டி மீதும் துண்டுக் காகிதத்தில் எழுதி ஒட்டி வைப்பான்.

புதிது புதிதாய்ப் பல விஞ்ஞான உண்மைகளைக் கண்டு பிடிக்க வேண்டும். பெரிய விஞ்ஞானியாக வேண்டு மென்ற ஆசை இந்த வயதிலேயே அவனுக்கு இருந்தது. வானத்திலே பறவை பறக்கின்றதே, அதே போல் நாம் ஏன் பறக்கமுடியாது! என்று அவன் தனக்குள் அடிக்கடி கேட்டுக் கொள்வான்.

ஒரு நாள் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. உடனே இரசாயனப் பொருட்கள் சிலவற்றை எடுத்து நன்றாக அரைத்து பொடியாக்கினான். அந்தத் தூளை அவர்கள் வீட்டு வேலைக்காரப் பையன் மைக்கேல் ஓட்ஸ் என்பவனிடம் கொடுத்து நீ இந்த தூளைச் சாப்பிடு. சிறிது நேரத்தில் ஒரு அதிசயம் நிகழுமென்றான். நீ இருந்த இடத்தை விட்டு மெல்ல மெல்ல மேலே எழும்புவாய். விர் ரென்று வானத்தில் பறப்பாய் -உம்- "வாயைத்திற" என் றான்.

மைக்கேல் பயந்தான். பயப்படாதே! முதன்முதலாக வானத்தில் பறந்தவன் யசர் என்று கேட்டால் மைக்கேல் ஓட்ஸ் என்று எல்லோரும் சொல்வார்கள். உம்- விழுங்கு என்று மைக்கேலை கட்டாயப்படுத்தினான்.

மைக்கேல் அரை மனதுடன் அந்தத்தூளை வாய்க்குள் போட்டு விழுங்கினான். சிறிது நேரம் சென்றது. மைக்கேல் மேலே எழும்பவும் இல்லை; வானத்தில் பறக்கவும் இல்லை தடால் என்று கீழே சாய்ந்தான். மயங்கி விழுந்தான்

அப்பொழுது தூளைக் கொடுத்த சிறுவனின் தாயார் வந்தார். அவளுக்கு மகன் மீது கோபம் கோபமாக வந்தது. அவன் கன்னத்தில் இரண்டு போட்டாள்; அவன் காதைப் பிடித்து திருகினாள், நல்லவேளை மைக்கேலின் உயிருக்கு ஒன்றும் ஆபத்து ஏற்படவில்லை.

சிறுவயதில் இப்படியெல்லாம் சோதனை செய்து பார்த்த சிறுவன் பெரியவனான பிறகு அவன் செய்த சாதனைகள் அளவற்றவை.

மின்சார விளக்கில் படிக்கும் பொழுது, திரைப்படத்தை பார்க்கும் பொழுது டெலிபோனில் பேசும்பொழுது, கிராமபோனில் கேட்கும் பொழுது நாம் மறக்காமல் அவனுக்கு நன்றி செலுத்த வேண்டும்.

அவன் தான்: தாமஸ் ஆல்வா எடிசன்

---

## அதிகாலை எழுதலினால் ஏற்படும் பயன்கள்

ஒழுக்கம் அதிகாலை விழிப்பினால் தொடங்குகின்றது. ஒழுக்கக்கேடு அதிகாலை எழாமையால் தொடங்குகின்றது. அதிகாலை எழுதலினால் மலச்சிக்கல் நீங்கும். அதிகாலை எழாதார் மலச்சிக்கல் உடையவர். இரத்தம் அசுத்தமாய்க் கொண்டு வரும் அதிகாலையில் எழுதலின் குணத்தை பின் வருமாறு கூறுகின்றார் தேரையர்.

புத்தியதற்கு பொருந்து தெளிவளிக்கும்
சுத்தநரம்பினறல் துய்மையுறும்-பித்தொழியும்
தாலமதில் வாதபித்தம் தத்தம்நிலை மன்னும்-அதி
காலை விழிப்பின் குணத்தைக் காண்

—தேரையர்

விடியற்காலையில் எழுதலினால் இரத்தம் சுத்தமாகும்.

# சரித்திரம் படைத்த சாதனையாளர் ஏ.வி. மெய்யப்பச்செட்டியார் அவர்கள்

செய்திகள் தந்து உதவியவர்.
A.V.M. பழனியப்ப செட்டியார் அவர்கள்.
காரைக்குடி.



ஏ. வி. எம். மெய்யப்பச் செட்டியார்

ஏ.வி.எம். படநிலையத்தை அறியார் தமிழகத்தில் யாரும் இல்லை என்று உறுதியாக கூறலாம். சிறப்புமிக்க அந்த நிறுவனத்தை நிறுவிய தென்னக திரையுலக முன்னோடி ஏ.வி. மெய்யப்பச் செட்டியார் அவர்களைப் பற்றிய சுவையான செய்திகளை கீழே தந்துள்ளேன்.

காரைக்குடியில் ஆவிச்சி செட்டியார் அவர்களுக்கும், லட்சுமி ஆச்சி அவர்களுக்கும் 28—7—1907ல் பிறந்தார். காரைக்குடி மீனாட்சி சுந்தரேசுவரர் வித்தியாசாலையில் 8வது வகுப்பு வரை கல்வி பயின்றார். 1920-32 வரை தந்தையார் ஆவிச்சிசெட்டியார் அவர்கள் நிறுவிய இன்னும் இயங்கிவரும் காரைக்குடி 'ஏவி.அன் சன்ஸ்' நிறுவனத்தை நடத்திவந்தார்.

திரையுலகில் ஏவி: மெய்யப்பச்செட்டியார் அவர்கள்:— திரையுலகில் 1932ல் தயாரிப்பாளராக அடியெடுத்து வைத்தார்கள். முதலில் அவர் தயாரித்த படம் "அல்லிஅர்ஜுனா" அடுத்து "ரத்னாவளி" மூன்றாவதாக "நந்தகுமார்" ஆகிய படங்களை தயாரித்தார். 1946-47ல் காரைக்குடியில் ஏவி.எம். படநிலையத்தை நிறுவினார். டி..ஆர். மகாலிங்கம் நடித்த "நாம் இருவர்" படத்தை தயாரித்தார்கள், பின் "வேதாள உலகம்" படத்தை தயாரித்தார்கள். ஒரு காலத்தில் திரையுலகில் சிறப்புற்று விளங்கிய லலிதா பத்மினி ராகினியின் நடனத்தை வேதாள உலகம் படத்தில் அறிமுகப்படுத்தினார்கள் ஏவி.எம். அவர்கள் பல மொழிப் படங்களை தயாரித்துள்ளார்கள். ராம்ராஜ் என்ற இந்திப் படத்தை வாங்கி தமிழில் டப்செய்து ராம்ராஜ்யம் என்ற பெயரில் ஏவி.எம். நிறுவனம் வெளியிட்டது. இந்தியாவிலேயே முதன்முறையாக ஒரு மொழியில் வெளிவந்த படத்தை வேறு மொழியில் டப் செய்து வெளியிட்ட முதல் நிறுவனம் A.V.M. நிறுவனமேயாகும்.

ஏவி,எம். நிறுவனத்தால் புகழ்பெற்ற கலைஞர்கள்:— "பராசக்தி" மூலம் சிவாசிகணேசனையும் 'நாம் இருவர்' மூலம் T. R. மகாலிங்கத்தையும், 'வாழ்க்கை' மூலம் வைஜயந்திமாலாவையும் மற்றும் கமலஹாசன், டி.ஆர். இராமச்சந்திரன் மற்றும் பலரையும் ஏவி. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் திரையுலகிற்கு அறிமுகப்படுத்தினார்கள்.

சாதனையாளர்: திரை உலகில் பல துறைகளில் சாதனை படைத்த ஏவி.எம். அவர்கள் இயக்கிய படங்கள் சபாபதி, வேதாள உலகம், நாம் இருவர், வாழ்க்கை, ஸ்ரீவள்ளி படத்தில் விநாயகருக்கு ஏவி.எம். அவர்கள் குரல் கொடுத்துப் பேசினார்கள். செர்மனியின் ஆர்வோஃபிலிம் தயாரிப்பை இந்தியாவிற்கு அறிமுகப்படுத்தினார்கள். அறிஞர் அண்ணாவின் ஓர் இரவு கதையை AV. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் திரைப்படமாக உருவாக்கினார்கள். "கோவலன்" வசனம் பாடல்களை ஒடியன் நிறுவனம்

வழியே வெளியிட்டார்கள். தூக்குதூக்கி கதை வசனம் கொண்ட இசைத் தட்டுகளை வெளியிட்டார்கள். 12—8—1979ல் காலமான ஏவி. மெய்யப்பச் செட்டியார் அவர்கள் படைத்த சாதனைகள் பலவாகும்.

நற்பணிகள், பொதுப்பணிகள்: முதன்முதலில் தன் தொழிலாளிகளுக்கு வீடு கட்டிக் கொடுத்தவர் ஏவி.எம். செட்டியார் அவர்கள். ஏவி.எம். காலனி. ஏவி.எம். நகர் இவையெல்லாம் ஏவி.எம். செட்டியார் அவர்கள் கட்டிய தொழிலாளர் குடியிருப்புகளாகும். தாம் கல்வி பயின்ற ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரர் பள்ளிக்கு ஏவி. எம். செட்டியார் அவர்கள் 1979ல் ஒரு லட்சம் ரூபாய் நன்கொடை கொடுத்துள்ளார்கள். பணம் கொடுத்து வாங்கிய பாரதியார் பாடல்களை நாட்டுக்கே இலவசமாகம் வழங்கினார்கள். வடபழநி பாலம் கட்ட, கோடம்பாக்கம் வளர்ச்சியுற அடிப்படையாக இருந்தவர் ஏவி.எம் செட்டியார் அவர்கள்.

ஏவி.எம்.பட நிறுவனம்: காரைக்குடியிலிருந்த தனது படநிலையத்தை ஏவி. மெய்யப்ப செட்டியார் அவர்கள் சென்னைக்கு மாற்றினார். வைஜயந்திமாலா நடித்த வாழ்க்கை திரைப்படம் சென்னை ஏவி எம். பட நிலையத்தில் தயாரிக்கப்பட்டது. 1967 வரை ஏவி.எம். பட நிலையத்தில் சொந்தப்படங்கள் மட்டுமே எடுக்கப்பட்டது. முதன் முதலில் மூன்று ப்ஃளோர்கள் தான் இருந்தது. தற்போது ஒன்பது படப்பிடிப்புத் தளங்கள் உள்ளது. எட்டாவது படப்பிடிப்புத் தளம் M.G.R. அவர்கள் நடித்த "அன்பே வா" படப்பிடிப்பு நடத்துவதற்காக உருவாக்கப்பட்டது.

செல்வர்கள்: ஏவி. மெய்யப்பச் செட்டியார் அவர்களின் செல்வரான ஏவி.எம். பழனியப்பச் செட்டியார் அவர்கள் உயர்ந்த பண்பாளர். ஏவி. மெய்யப்ப செட்டியார் அவர்களின் செல்வர்களான ஏவி.எம். சரவணன் அவர்கள், ஏவி.எம். பாலசுப்பிரமணியன் அவர்கள், ஏவி.எம். முருகன் அவர்கள் பல தரமான நல்ல படங்களை ஏவி.எம். பட நிறுவனம் மூலம் தயாரித்து வெளியிட்டு தங்களது தந்தைக்கும் தங்களது நிறுவனத்திற்கும் தமிழ்நாட்டிற்கும் பெருமை சேர்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஏவி.எம் தயாரித்த நாம் ஒரு கிளையின் பறவைகள் [இந்திப்படம்] 'குழந்தையும் தெய்வமும்' படமும் குடியரசு தலைவரிடம் பரிசு பெற்றது.



## மதுரைவீரன் தயாரித்த மானகிரி லெட்சுமணன் செட்டியார் அவர்கள்

'மானகிரி லெட்சுமணன் செட்டியார் அவர்களை நாடு நன்கறியும். M. G. R. நடித்து அவர் தயாரித்த 'மதுரை வீரன்' திரைப்படம் இன்றைக்கும் வசூலை அள்ளிக் கொடுத்துக் கொண்டுள்ளது. மானகிரி 'லேனா' அவர் களைப்பற்றி விரிவாக எழுத விரும்பி மதுரைக்குச் சென்று அவருக்கு நெருக்கமானவர்களைச் சந்தித்து விபரம் கேட்ட பொழுது மேலூரில் அவரது உறவினர்கள் இருப்பதாகச் சொன்னார்கள். மேலூருக்குச்சென்று விசாரித்தபொழுது அவர்கள் சென்னையிலுள்ள அவரது உறவினர் S. S. திருப்பதி செட்டியார் அவர்கள் முகவரியைக் கொடுத்தனர். சென்னையிலுள்ள நண்பர் நாகப்பன் மூலம் மேற்கண்ட முகவரிக்கு தொடர்புகொண்ட பொழுதும் இதுவரை விபரம் கிடைக்கவில்லை. எனவே எனக்குத் தெரிந்த ஒன்று இரண்டு விபரங்களை கீழே தந்துள்ளேன். மானகிரி லேனா அவர்களால் திரைஉலகில்புகழ்பெற்றவர்கள் T R. ராசகுமாரி, SP. தனலெட்சுமி, EV. சரோஜா, கிருட்டிணா பிக்சர்ஸ் என்ற பட நிறுவனம்மூலம் மதுரைவீரன், ராஜா தேசிங்கு, படங்களை தயாரித்தார். மணமகள் மற்றும் சில

## சிறு செய்திகள்:

நாட்டரசன்கோட்டை,
முருகப்பன்

1. முதல் சமூக சீர்திருத்த நாடகம் ''பிரதாப் சந்திர விலாசம்'' எழுதியவர். இராமசாமி ராசா, ஆண்டு: 1875.

2. தமிழ் நாடகத் தந்தை து. தா. சங்கரதாஸ் சுவாமிகள். இவர் தூத்துக்குடி தாமோதரம்பிள்ளை அவர்களின் செல்வர்.

3. மறுமலர்ச்சி நாடகத்தந்தை பம்மல் சம்பந்த முதலியார். இவரது தோற்றம் 1973. மறைவு: 1964

4. முதலில் பாவலர் நாடகக்குழுவை தோற்றுவித்தவர் கும்பகோணம் தாப்பா வெங்கடாசல பாகவதர். ஆண்டு:1910

5. முதல் நாடகக்கலை மாநாடு 1944ல் ஆர்.கே. சண்முகம் செட்டியார் அவர்கள் தலைமையில் டி.கே.எஸ். சகோதரர்களால் நடத்தப்பட்டது

# திரை உலகம்.

## சின்னச் சின்னச் செய்திகள்:

தொகுத்தவர் - இராசகுமாரிசெந்தமிழன்

1. தென்னிந்தியாவின் முதல் திரைப்பட அரங்கம் கோவையிலுள்ள 'வெரைட்டிஹால்' 1914ம் ஆண்டு இத் திரையரங்கு கட்டப்பட்டது.

2. அகன்ற திரையில் (சினிமாஸ்கோப்) திரைப்படம் காட்டும் முறை 1959ல் நடைமுறைக்கு வந்தது.

3. இந்தியாவில் [ஏ] சர்டிபிக்கேட் [வயது வந்தவர்கள் மட்டும் பார்க்ககூடிய படம்] வழங்கும் முறை 1918ல் நடைமுறைக்கு வந்தது.

4. ''மாவீரன்'' தான் தமிழில் வெளிவந்த முதல் 70 எம்.எம். படம்.

5. இரசியாவில் தயாரிக்கப்பட்ட 'போரும் சமாதானமும்' என்ற படம் தான் உலகிலேயே அதிக செலவில் தயாரிக்கப்பட்ட படமாகும்.

6. மாதம் ஒன்று இரண்டு நாட்கள் திரைப்படம் காட்டும் வழக்கத்தை மாற்றி அமைத்தவர் மானேக் டி சேத்னா. 1896ம் ஆண்டு முதல் திரைப்படங்கள் தினசரி காட்சிகளாக காட்டப்பட்டன

7. முதன் முதலில் பின்னணிகுரல் அமைய வெளிவந்த படம் வங்காளி மொழிப் படமான 'பாக்யசக்ரா'

8. இந்தியாவின் முதல் பேசும்படம் "ஆலம்ஆரா" முதல் தமிழ் பேசும்படம் காளிதாஸ்.

9. இந்தியத் திரை உலகின் தந்தை தாதா சாஹப் பால்கே.

10. ஸ்டிரியோ: போனிக் முறையில் ஒலிப்பதிவு செய்யப்பட்டு முதல்முதலாக வெளிவந்த படம் ஃபான்ட்டஸியா'' என்ற அமெரிக்க படமாகும்.

11. பல மொழிகளில் 609 பிரதிகள் எடுத்து வெளியிட்ட படம் ஜெமினியின் ''சந்திரலேகா'' படமாகும்.

12. முழு வண்ணத்தில் முதல் தமிழ்படம் அலிபாபாவும் 40 திருடர்களும்.

## பெண்களும் திரைஉலகமும்.

1. முதல் பெண் இயக்குநர் பி.பி. ராசலெட்சுமி

2. இலட்சம் ரூபாய் ஊதியம் வாங்கிய முதல் பெண் நடிகை K.P. சுந்தராம்பாள்.

3. முதன்முதலாக தேசிய விருது பெற்றவர் லட்சுமி

### கண்டுபிடித்தவர்கள்:

1. திரைப்படக்காமிராவை கண்டுபிடித்தவர் பிரான்சு நாட்டைச் சார்ந்த லுமியா சகோதரர்கள் - கண்ட ஆண்டு 1895

3. தொலைக்காட்சியைக் கண்டவர் பியர்டு.

4. டிரான்சிஸ்டர் ரேடியோவைக் கண்டவர் பிரைட்டன் & பார்டீன்

5. வானொலியைக் கண்டவர் இத்தாலியைச் சார்ந்த மார்கோனி - ஆண்டு 1902.

# கலையும் கவியும்.

1. நீ கலைஞனாக விரும்புகிறாயா? கவிஞனாக விரும்புகிறாயா?
கலைஞனாகத்தான்!
ஏன்?

"கலை என்பது கடல் போன்றது. குடித்தால் அது கலை, ஓடினால் அது கலை, உட்கார்ந்தால் அது கலை, எதைச் செய்வதாலும் கலைஞனென்று சொல்லிக்கொள்ளலாம். ஆனால் கவிஞனாவது அப்படி இல்லையே!"

- கவியரசர் கண்ணதாசன்

2. திரையுலகம்பற்றி கவியரசு கண்ணதாசன்:

அஞ்சலில் அனுப்பவேண்டிய செய்தியை சினிமாக்காரன் தந்திவழியே அனுப்புவான். தந்தி மூலம் அனுப்ப வேண்டியதை டிரங்காலில் சொல்வான். டிரங்கால் மூலம் பேசவேண்டிய செய்திக்கு பிளேனில் நேராகவே போய் சொல்லிவிட்டு வருவான்.

- கவியரசர் கண்ணதாசன்

கூறியவர் - இராமசுப்பிரமணியன்

சுப. அருணாசலம்
உண்ணாமூவீஸ்
திருச்சி – 2

அன்புடையீர்,

தங்கள் 13—03- 89 அஞ்சல் அட்டை கிடைக்கப் பெற்றோம். சித்திரை மாத இதழ் திரைமலராக வர இருப்பது அறிந்து மகிழ்வடைகிறோம். திரை உலக முன்றேற்றத்தில் நம்மவரின் பங்கு மிகவும் அதிகம். தயாரிப்பாளர் வரிசையில் முதல் இடம் வகிக்கும் ஏ.வி. எம், நிறுவனத்தை உருவாக்கிய பெருமை காரைக்குடியைச் சேர்ந்த ஏ. வி.மெய்யப்பசெட்டியார் அவர்களையே சேரும்.

மேலும் சிறுகூடல்பட்டி ஏ எல். சீனிவாசன் அவர்கள் தயாரித்த படங்கள் ஏராளம் அவரது சகோதரர் கவிஞர் கண்ணதாசன், இவர் திரைப்படங்களுக்கு கதை, வசனம், பாடல்களையும் எழுதியிருப்பதுடன் தயாரிப்பாளராகவும் இருந்தார். பாடல்கள் எழுதுவதில் அவருக்கு இணை அன்றும் இல்லை இன்றும் இல்லை.

மானகிரியை சேர்ந்த லெட்சுமணன் செட்டியார் அவர்கள் கிருஷ்ணு பிக்சர்ஸ்என்ற பெயரில் திரைப்படத் தயாரிப்பாளராக இருந்து பல வெற்றிப்படங்களை படைத்துள்ளார்கள்.

இப்பொழுது தயாரிப்பில் நம்மவர்கள் பலர் இடம் பெறுகின்றனர், அதில் காரைக்குடி சட்ட மன்ற உறுப்பினர் இராம.நாராயணன் அவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.ஏராளமான படங்களை தயாரித்து இயக்கி வருவதுடன் மற்லவர்கள் தயாரிக்கும் படங்களையும் இயக்கி வருகிறார்கள்.

இயக்குநர் வரிசையில் முதலிடம் பெறுபவர் இயக்குநர் எஸ். பி. முத்துராமன் அவர்கள். அடுத்து வி. அழகப்பன் அவர்கள்ராஜகாளியம்மன் எண்டர்பிரைசஸ் நிறுவனத்தின் பங்குதாரர் திரு. மோகன் நடராஜன் அவர்கள் ராங்கியத்தை சேர்ந்தவர்கள், தொடர்ந்து பல வெற்றிப் படங்களை தயாரித்து வெளியிட்டு வருகிறார்கள்.

திரைப்படவிநியோகத்தில் அனைத்து மாவட்டங்களிலும் நம்மவர்கள் அதிக எண்ணிக்கையில் உள்ளனர். தமிழகம் முழுவதிலும் புதிய திரையரங்குகள் பலவற்றைகட்டி சிறப்புடன் தொழில் செய்தும் வருகிறார்கள்.

சென்னை திரையரங்குகள்:... அபிராமி, கமலா, கெயிட்டி காமதேனு, கிருஷ்ணவேணி, பழநியப்பா.

கோவை:— கற்பகம் காம்ப்ளக்ஸ் சேலம்: - பழநியப்பா
மதுரை:— சிவம், சக்தி, மிட்லண்ட், சுந்தரம், கலைவாணி
கல்பனா
திருச்சி :— சோனா&மீனா தியேட்டர்
புதுக்கோட்டை:— பழநியப்பா
பாபநாசம் :— மகாலெட்சுமி
காரைக்குடி :— சிவம், ராமவிலாசம், நடராஜா,
அருணாசலா
சிதம்பரம் :— வடுகநாதன், லேனா
தேவகோட்டை :— ... ...

திரையுலகில் தயாரிப்பாளர், விநியோகஸ்தர்களுக்கு பண உதவி செய்வதிலும் நம்மவர் பலரும் ஈடுபட்டுள்ளனர்.

### நாடகக் கலை வளர்ச்சியும் நகரத்தாரும்:

காரைக்குடி லட்சுமணன் B.Com.,

நாடகப் புரவலர் - பள்ளத்தூர் வயிரம் அருணாசலம் செட்டியார் 1943ல் காரைக்குடியில் ஸ்ரீராமபாலகான சபாவினை நிறுவி சமூக நாடகங்களையும், வரலாற்று நாடகங்களையும் நடத்திக் காட்டினார்கள். ஏவி. மெய்யப்பச் செட்டியார்' சிறுகூடல்பட்டி AL. சீனிவாசன் செட்டியார், கண்டரமாணிக்கம் லெ. மாணிக்கம் செட்டியார் டாக்டர் நாச்சியப்பன் ஆகிய பெரியோர்கள் ஸ்ரீ நடராசா அமெச்சூர்ஸ் என்ற நாடகக் கழகத்தின் வழியே பல நாடகங்களை நடத்திக்காட்டினார்கள்.

வயிரம் அருணாசலம் செட்டியார் அவர்களின் ஸ்ரீராமபாலகானசபா நாடக நிறுவனம் மூலம் புகழ்பெற்ற நடிகர்கள். MN. நம்பியார், முத்துராமன், சாயிராமன், குலதெய்வம் ராசகோபால், SM. ராமனாதன், நடிகை மனோரமா M.S.S. பாக்கியம் மற்றும் பலராவர்.

**தமிழ் இசைக்கு எதிரானவர்கள் நம்மவருக்கு எதிரானவர்கள்:**

அரியக்குடியைச் சார்ந்த இராமானுச அய்யங்கார் தமிழில் பாட மறுத்தார். அக்காரணத்தினால் நம்மவர் எவரும் அவரைப் பாட அழைப்பதில்லை. செம்மங்குடி, முசிறி, கச்சேரிகளை கேட்க ஆளில்லை காரணம் அவர்கள் தமிழில் பாட மறுத்ததேயாகும். செட்டிநாட்டுத் திருமண நிகழ்ச்சிகளில் தமிழ்இசை முழங்கிற்று.

அலவாக்கோட்டை

RM. சுப்பிரமணியன் – மதுரை

1. 1942ல் அரசர் அண்ணாமலை செட்டியார் அவர்கள் முயற்சியால் தேவகோட்டையில் தமிழிசைப்பள்ளி தொடங்கப்பெற்றது.

2 1944ல் வலம்புரியில் தமிழிசை மாநாடு நடைபெற்றது. 1946ல் காரைக்குடியில் முத்துத்தாண்டவர்இசைவிழா நடைபெற்றது.

3. ராயவரம் சுப. இராமநாதன் செட்டியார் அவர்கள் முத்துமாரி அம்பிகை மீது பக்தி ரசகீர்த்தனைகளைச் செந்தமிழில் பாடினார். குமரன், செட்டிநாடு, முதலிய இதழ்கள் இசை மலர் வெளியிட்டது.

4. பனையபட்டி வீணைதீர்த்தான் செட்டியார் பல இடங்களுக்கு சென்று தமிழில் கச்சேரி செய்தார்.

5. தேவகோட்டை அழ, அரு குடும்பத்தினர் 1-11-1941ல் தமிழ் இசைமாநாட்டை சிறப்பாக நடத்தினர்.

## மதுரையில் திரைப்பட உலகில் நம்மவர்கள்

PL. சிதம்பரம்

சாந்தா பிலிம்ஸ், மதுரை

மதுரை, இராமநாதபுரம், பசும்பொன் தேவர் திருமகன், திண்டுக்கல், காயிதே - மில்லத், காமராசர் மாவட்ட திரைப்பட வெளியிட்டாளர்கள் சங்கப் பொருளாளராத சாந்தா பிலிம்ஸ் பட வெளியீட்டாளர் PL. சிதம்பரம் செட்டியார் அவர்கள் உள்ளார். அவர் தந்த செய்திகளை கீழே தந்துள்ளேன்.

1. மதுரையில் 40பட வெளியீட்டாளர்கள் நம்மவர்கள்

2. மதுரை - ராமநாதபுர திரைப்பட வெளியீட்டாளர் சங்கத்தில் உறுப்பினராக நம்மவரான RM வீரப்பன் அவர்கள் (செல்வ மீனாள் பிலிம்ஸ்) உள்ளார்.

3. சங்க கௌரவ ஆலோசகர்களாக CT. நாகப்பன் அவர்களும் (M. L. M. மூவீஸ்) சுந்தரம் திரையரங்கு நல்லம்மை பட வெளியீட்டாளர் கந்தசாமி அவர்களும் உள்ளனர்.

4. உலக நெகடிவ் உரிமையை மதுரையில் முதலில் அறிமுகப் படுத்தியவர் சாந்தா பிலிம்ஸ் PL. சிதம்பரம் அவர்கள் மேலும் (மதுரை -ராமனுதபுரம் மாவட்டங்களுக்கு( பழையத் திரைப்படங்களுக்கு ஐந்து ஆண்டுகளுக்கு மட்டும் என்றிருந்ததை 99 வருடங்களுக்கு வாங்கலாம் என் முன் எடுத்துக் காட்டியவர் PL. சிதம்பரம் அவர்கள்

5. சென்னை கமலா திரையரங்குஉரிமையாளர் VN. சிதம்பரம் செட்டியார் அவர்களும் கல்பனு திரையரங்கு உரிமையாளர் பாகனேரி AN. முத்துக்கருப்பன் அவர்களும் மதுரையில் உள்ளனர்.

6. மதுரை சக்தி - சிவம் திரையரங்கு உரிமையாளர் RM. அண்ணாமலை அவர்கள் தமிழ்நாடு திரையரங்கு உரிமையாளர்கள் சங்கத் துணைத் தலைவர்.

7. உலகம் காப்பது பட்டிப்பச் செட்டியார் அவர்கள் குடும்பத்தார் மதுரை திரைப்பட உலகில் குறிப்பிடத்தக்கவர்கள்.

## தமிழ் இசை ஏன் வேண்டும்?

தமிழ் இசை இயக்கத்தினைப் பற்றித் தவறான கருத்துக்கள் வெளி வந்தமை தகாது. புதுத் தமிழ்ப் பாடல்கள் இயற்றுவதற்கும், பழந்தமிழ்ப் பாடல்களைப் புதுப்பிப்பதற்கும் ஊக்கமளிப்பதே என் விருப்பமாகும். தெலுங்கு முதலிய பிற மொழிப் பாடல்களை வெறுப்பது என் நோக்கமன்று. தமிழ் மக்களில் பெரும்பாலோர் தமிழ்ப்பாடல்களால் பெறும் இன்பத்தைப் பிற பாடல்களால் பெற இயலவில்லை.

இசைக் கலைஞர் அல்லாத பிற மக்கள், தம் தாய் மொழிப் பாட்டினாலேயே இசை நலம் துய்த்தலால் தெரிந்த மொழியிலேயே பாடல்கள் இருக்க வேண்டும். பெரும்பாலோர் விருப்பமும் அதுவே. மொழி இசைக்கு அவசியம் இல்லையாயின் கருவி இசையே போதும். வாய்ப் பாட்டு வேண்டுவதில்லை. ஆனால் தியாகையர் தம்முடைய உள்ளத்தை இசைப்பாடல் வாயிலாகவே விளக்கினார் என்பதால் மொழியின் அவசியம் தெளிவாக விளங்கும். இது தமிழ்நாடு. நாம் தமிழில் பேசுகின்றோம், நமக்குச் சிறந்த இயற்றமிழ் இலக்கியம் இருக்கின்றது, இசைக்குத் தமிழ் இணங்கியது என்பதற்குப் போதிய சான்றும் உண்டு. தாய் மொழி வளர்ச்சியில் தமிழர்கள் ஈடுபட்டிருக்கின்ற காலம் இது. இசை இன்பத்தினை நுகர்வதற்கு எங்களுக்குத் தமிழ் பாடல்கள் வேண்டும் என்று தமிழ் மக்கள் கூறுகின்றனர். அவர்களின் தேவையை நிறைவு செய்தல் நமது கடமை என்பது பற்றியே நன்கொடைகள் வழங்கியுள்ளேன்.

—ராஜா சர் அண்ணாமலை செட்டியார்
(1941 அக்டோபரில் சென்னையில் நடைபெற்ற தியாகப் பிரும்ம மகோற்சவ சபையின் இசை விழாவில் பேசுகையில்)

நன்றி-குங்குமம்

# தமிழ்த் திரைப்பட உலகில் நகரத்தார்கள்

தொகுப்பாளர்—சுப. செந்தமிழன்




சின்ன அண்ணாமலை


பழ. கருப்பையா


சுப. இராமநாதன்

திரை உலகில் சாதனைகள் பல படைத்தவர்கள், படைத்துக் கொண்டிருப்பவர்கள் நம்மவர்கள் என்றால் அது மிகையாகாது. இங்கே நான் அறிந்த சிலரைப் பற்றி தொகுத்து, சேர்த்துத்தந்துள்ளேன்.

சின்ன அண்ணாமலை: சிறுவயலில் பிறந்து தேவகோட்டைக்கு சுவீகாரம் சென்ற சின்ன அண்ணாமலை அவர்கள் சிறந்த தேசியவாதி, எழுத்தாளர் புத்தக வெளியீட்டாளர், திரைப்படத் தயாரிப்பாளர் தமிழ்ப் பண்ணை என்ற புத்தக வெளியீட்டு நிறுவனத்தை ஏற்படுத்தி பல அறிஞர் பெருமக்களின் நூலை வெளியிட்டார் மருமகள் சக்ரவர்த்தி திருமகள், தங்கமலை ரகசியம் ஆகியவற்றின் படக்கதையை எழுதியவர். ஏ எல்.எஸ் பட நிறுவனத்தின் கதைக் குழுவின் தலைவராக இருந்து. திருடாதே அம்பிகாபதி படங்கள் உருவாக காரணமாக இருந்தார். வீரபாண்டிய கட்டபொம்மன் படம் தயாரிக்க இவர் பெரிதும் உதவியாக இருந்தார். இவர் தயாரித்த படங்கள் பிரசிடெண்ட் பஞ்சாட்சரம், கடவுளின் குழந்தை, ஆயிரம் ரூபாய், மனிதனும் தெய்வமாகலாம், ஜெனரல் சக்கரவர்த்தி, தர்மராஜா மற்றும் பல படங்கள். 1969ல் அகில இந்திய சிவாஜி கணேசன் ரசிகர்மன்றத்தை உருவாக்கி அதன் தலைவராக இருந்து சிறப்பாக செயல்பட்டார்.

பழ கருப்பையா தமிழ்ப் பற்றாளர் சிறந்த எழுத்தாளர். திரைப்படத் தயாரிப்பாளர் 1970ல் தன் திருமணத்தை தமிழ்த் திருமணமாக நடத்தியவர் காரைக்குடியைச் சார்ந்தவர். பல படங்களைத் தயாரித்தவர்.

இராம.நாராயணன்: காரைக்குடி சட்டமன்ற உறுப்பினரான இவர் மக்கள் விருப்பத்திற்கு ஏற்ப படங்களை எடுப்பவர். இவரது படங்கள் நல்ல கருத்துடனும், நகைச்சுவையுடனும் இருக்கும். கவியரசு கண்ணதாசனிடம் இரண்டாண்டுகள் உதவியாளராக இருந்தார். சுமார் நாற்பது படங்களை இயக்கியுள்ளார்.

ஒலிப்பதிவாளர் எஸ்.பி இராமனாதன்: நேமத்தான்பட்டியைச் சேர்ந்தவர். 1949ல் சென்னை ஏவி.எம் பட நிலையத்தில் நிரந்தர உதவி ஒலிப்பதிவாளராக சேர்ந்தார். இவர் முதன்முதலாக தனியாக ஒலிப்பதிவு செய்த கன்னடப்படம் வேடரகண்ணப்பர் ஆகும். 1964ல் கோல்டன் படப்பிடிப்பு நிலையத்தில் தலைமை ஒலிப்பதிவாளராகப் பணியாற்றினார். அப்பட நிலையம் மூடப்பட்ட காரணத்தால் பிரசாத் படநிலையத்தில் சேர்ந்து அங்கு

தலைமை ஒலிப்பதிவாளராக பணியாற்றி வருகிறார். இவர் ஒலிப்பதிவு செய்த வேடர கண்ணப்பா தெலுங்கில் பக்த கண்ணப்பாவாக எடுக்கப்பட்டது' அந்தப் படத்திற்கு தான் சிறந்த ஒலிப்பதிவாளர் என்ற தேசியவிருது இவருக்கு கிடைத்தது. அடுத்து கோதுளி (இந்தி), நெஞ்சத்தைக் கிள்ளாதே (தமிழ்) ஆகிய படங்களுக்கும் சிறந்த ஒலிப் பதிவாளருக்குரிய தேசிய விருது பெற்றார். திரைப்படத் துறையில் 40 ஆண்டுகளாக பணி புரிந்து வருகின்றார்.

இயக்குநர் இராசசேகரன்: பசும்பொன்தேவர் திருமகன் மாவட்டம் நாட்டரசன் கோட்டையைச் சார்ந்த இராச சேகரன் அவர்கள் இராம. நாராயணனுடன் இணைந்து சில படங்களைத் தயாரித்தார். "நாம் பிறந்த மண்" என்ற படத்திற்கு முதன்முறையாக கதை எழுதினார். இவர் இயக்கிய படங்கள் அம்மா, மலையூர் மம்பட்டியான், தம்பிக்கு எந்த ஊரு, மாவீரன், விக்ரம் மற்றும் பலவாகும்.
கோனாபட்டு எஸ்.சுப்பையா செட்டியார்: கோவையி லுள்ள கங்கா, யமுனா, காவேரி முதலிய திரையரங்குகளின் உரிமையாளர். கலை நுணுக்கம் மிகுந்த திரையரங்குகள் கங்கா, யமுனா, காவேரி திரையரங்குகள்.

வேந்தன்பட்டி அழகப்பன்: பட்டதாரியான இவர் பத்தாண்டுகள் போராடி இயக்குனரானவர். ராமாயி வயசுக்கு வந்துட்டா என்பது இவரது முதல்படம்.

காரைக்குடி நாராயணன்: வீட்டுக்கொரு விவேகானந்தர் இவர் எழுதிய முதல் நாடகம். இது தவிர பதினேழு நாடகங்களை எழுதியுள்ளார். இவர் இயக்கிய முதல் திரைப்படம் அச்சாணி. அச்சாணி திரைப்படம் இவருக்கு பல சிறப்புகளை பெற்றுத் தந்தது. கேரள அரசின் சிறந்த கதாசிரியர் என்ற கௌரவத்தைத் தேடித் தந்தது. 1978-79ல் தமிழக அரசால் இவரது அச்சாணி சிறந்த திரைப்பட மாக தேர்ந்து எடுக்கப்பட்டு ஒரு இலட்ச ரூபாய் ரொக்கப் பரிசையும் பெற்றுத் தந்தது. இது தவிர மீனாட்சி குங்குமம், அன்பே சங்கீதா, நல்லது நடந்தே தீரும் ஆகிய படங்களுக்கு கதை வசனம் எழுதி இயக்கியுள்ளார். திக்கற்ற பார்வதி, தீர்க்க சுமங்கலி மற்றும் பல படங்களுக்கு வசனம் எழுதியுள்ளார்.

AL. சீனிவாசன்: சிறுகூடல்பட்டியைச் சார்ந்தவர். கவி யரசு கண்ணதாசன் அவர்கள் உடன் பிறப்பு, திருடாதே, சாரதா, கந்தன் கருணை, சக்ரவர்த்தி திருமகள் மற்றும் பல படங்களை தயாரித்தவர். சென்னை, பம்பாய் திரைப்பட வணிக கழகங்களின் தலைவராக சில ஆண்டுகள் பணி புரிந்தவர். திரையுலகிலும், அரசியலிலும் செல்வாக்குடன் இருந்தவர்.

சிறுகதை மன்னர் S.S. தென்னரசு அவர்கள்: செட்டி நாட்டை சார்ந்தவர்இவர் நூற்றுக்கணக்கான சிறுகதைகள் எழுதியுள்ளார். எம்.ஜி.ஆர் நடித்த புதியபூமி திரைப்படத் திற்கு வசனம் எழுதியுள்ளார். இவர் தற்பொழுது திருப்புத்தூர் தொகுதி சட்டமன்ற உறுப்பினராக உள்ளார்.



சங்கீத வித்வான்

பனையபட்டி வினைதீர்த்தான் செட்டியார்

அவர்கள்

1911ல் பிறந்தார். இவர் அரியக்குடி, செம்மங்குடி ஆகியோரிடம் ஏழு ஆண்டுகள் இசைக் கல்வி பயின்றார். தமிழ் இசையை ப்ணம் பெறாமல் இந்தியா, இலங்கையில் பல இடங்களில் கச்சேரி செய்தார். தேவகோட்டையில் தமிழ் இசைச் சங்கத்தை நிறுவினார்.

நகைச்சுவை:

மது குடிச்சா என்ன வரும்?
தனிமயக்கம் வரும் போதை வரும்.
வெரிகுட், சரியாய் சொல்லிட்டே.

---

## அறிவிற்கு விருந்து.

வழங்குபவர்: K. சீனிவாசன் - சென்னை

1. சைபர் வால்ட்பல்பு என்பது உண்மையில் 15 வால்ட்பல்பு ஆகும். மின்சக்தியை சிறிது கூட செலவழிக்காமல் எந்த பல்பும் எரியமுடியாது.

2. பெட்ரோமாக்ஸ்லைட்டை கண்டுபிடித்தவர் புன்சன்.

3. உலகத்தில் பெரிய விண்வெளி நிலையம் சோவியத் ரசியாவில் செலன் சுகஸ்காயா என்ற இடத்திலுள்ளது.

4. உடலில் வலி திசுக்களுக்கு ஏற்படும் சேதங் களினாலும், காயங்களினாலும் விளையும்.

5. மூக்கின் உள்தோல் அழற்சியினால் வீங்கிப் போவதால் மூக்கடைப்பு உண்டாகின்றது

## அரிய காட்சிகள்



தேவகோட்டையில் பல ஆண்டுகளுக்கு முன் நடைபெற்ற நிகழ்ச்சியில் (இடமிருந்து வலமாக) AVM, தொழிலதிபர் M. V. அருணாசலம், நடிகர் திலகம் சிவாசி கணேசன், சின்ன அண்ணாமலை ஆகியோர்



திரைப்பட நடிகர் R. முத்துராமன் நகரத்தார்குரல் துணை ஆசிரியர் எல் சுந்தரம் இயக்குநர் SP. முத்துராமன் மோகம் முப்பது வருசம் பட வெற்றி விழாவிற்கு மதுரை வந்தபொழுது எடுத்த படம்



சென்னையில் ஒரு திரைப்பட விழாவில் எடுக்கப்பட்டது மேலே உள்ள படம். இடமிருந்து வலமாக இயக்குநர் சி. வி. ராசேந்திரன், ஏ. எல். சீனிவாசன், இசையமைப்பாளர் குன்னக்குடி ஆர். வைத்யநாதன், நடிகை செயலலிதா.



1962 இந்தியா-பாகிசுதான் போரின்போது போர் நடைபெற்ற இடத்தில் படையினரைக் கண்டு அவர்களின் வீரச்செயல்களை குறித்து சின்ன அண்ணாமலையும் கண்ணதாசனும் பாராட்டியபோது எடுத்த படம்

## வேலை வாய்ப்புச் செய்திகள்

### -- ஏப்ரல் 1989

தினத்தந்தி, தினமணி, The Hindu ஆகிய நாளேடுகளில் வெளிவந்த வேலை வாய்ப்புச் செய்திகள் கீழே தரப்பட்டுள்ளது. (3—4—89) முதல் வெளிவந்த வேலை வாய்ப்புச் செய்திகள்.

1. டைப்பிஸ்டுகள் (ஆங்கிலம் & தமிழ்) அலுவலக மானேஜர் ஆபீஸ் பையன்கள் தேவை - பெட்டி எண் 85 C/O தினத்தந்தி மதுரை.

2. தேவை: கேன்வாசிங் வேலைக்கு ஆட்கள் தேவை. சங்கம்ஸ்கிரின் ஆர்ட்ஸ், சேர்வைக்காரன் சந்து தமிழ்ச் சங்கம் வீதி, மதுரை – 1

3. WANTED I. T. I PASSED FITTERS TEXTILE MILL NEAR DINDIGUL BO × NO=1438 C/O தினத்தந்தி, திருச்சி - 620001

4. மதுரை, கீழவெளி வீதியிலுள்ள-கண் கண்ணாடிக் கடைக்கு சேல்ஸ் மேன்கள் தேவை. மதுரையிலுள்ளவர்கள் மட்டும் வரவும் பாபு ஆப்டிக்கல்ஸ், 199 கீழ வெளிவீதி, மதுரை.

5. ஏஜெண்டுகள் தேவை: மாத காலண்டர், படக் காலண்டர்களுக்கு கமிசன் அடிப்படையில் ஆர்டர் எடுக்க ஏஜெண்டுகள் தேவை. 30-4-89க்குள் விண்ணப்பிக்கவும் குமரன் தொழிலகம், 20-பி, ரேஸ்கோர்ஸ் ரோடு, திண்டுக்கல் 624005

6. புதுமையான விளம்பரம் தீப்பெட்டிகளுக்கு ஆர்டர்கள் சேகரிக்க ஏஜெண்டுக்கள் தேவை. நல்ல கமிஷன் சாம்பிள்கள் இலவசம் தி மேச்சஸ் இந்தியா, 11புகான்தெரு சிவகாசி - 626123

7. WANTED LADYTYPIST HiGHER GRADE ENGLISH - CONTACT J. M. XEROX: HIG31 ANNANAGAR - MADURAI - 20

தேவை: ஸ்டெனு, டைப்பிஸ்ட். ஆபீஸ்பாய், கம்பாசிட் வேலைக்கு ஆட்கள் தேவை.
முகவரி 161-A RA பில்டிங் வடக்கு வெளிவீதி, மதுரை
தேவை: கம்பாசிட்கள் தேவை
லேமினோகிராப்ட்ஸ், 33, அழகர்கோவில் ரோடு தல்லாகுளம், மதுரை-625002

அனுபவம் உள்ள ஆண்,பெண் டைப்பிஸ்ட் தேவை.

8. சிவா ஜெராக்ஸ், யு.சி. ஸ்கூல் அருகில், 12,திண்டுக்கல் ரோடு, மதுரை-1

9. முன் அனுபவமுள்ள கேன்வாசர்கள் BC-க்கள் எமது ஸ்டீல் பர்னிச்சர் கடைக்கு தேவை. தங்குமிடம் இலவசம்.

தமிழ்நாடு டிரேடிங் கார்ப்பரேஷன், ஆனந்தவவல்லி பில்டிங், வ.உ.சி. ரோடு, காரைக்குடி, பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம்.

10. ஈராக்கிற்கு தேவை: [1] சிவில் என்ஜினியர், [2] சிவில் டிராப்ட்ஸ் மேன் [3] சைட் சூபர்வைசர் [4, சிவில் சர்வேயர் [5] எலக்ட்ரிசியன்ஸ் [6] பெயிண்டர்கள் [7] வெல்டர்ஸ்.

குறிப்பு: தங்களைப் பற்றிய முழு விபரங்களுடன் சர்டிபிகேட்டுகளின் நகல்களுடன், 3 போட்டோக்கள் பாஸ்போர்ட் ஜெராக்ஸ் நகல், அஞ்சல் தலை ஒட்டப்பட்ட சுய விலாசமிட்ட கவர் இணைத்து அனுப்பவும்.

முகவரி: Post B‹ x No. 4650, Bombay - 400 008. Regd.No. Bom/Per/3/1216/84.

தினமணி - 7—4—89

11. தேவை: இராமனாதன் பல்பொருள் அங்காடி, 65, காந்திவீதி, சிவகங்கை. சுறுசுறுப்பு மிக்க விற்பனையாளர் தேவை.

12. தேவை: மதுரை நகரில் சைக்கிளில் சென்று கடைகளுக்கு பொருட்களை சப்ளை செய்யவும், வசூல் செய்யவும் ஆட்கள் தேவை. நேரில் வரவும். சம்பளம் 400-450. டெபாசிட் கிடையாது.

எம்.எம். மார்க்கெட்டர்ஸ், S. 9 ஈத்தகா பில்டிங், தேனி ரோடு, அரசரடி - மதுரை - 625 019

வேலை தேடும் வேலை: இந்தியா முழுவதிலும் உள்ள வேலைவாய்ப்பு நிறுவனங்களில் பதிவு செய்துள்ள வேலை இல்லாதவர்கள் மூன்று கோடி. இது 1988, டிசம்பர் 31ன் படி இக்கணக்காகும்.இதில் 27,700 பேர் டாக்டர் வேலைக்கு படித்தவர்கள். 57,900 பேர் என்ஜினியருக்கு படித்தவர்கள்

- மத்திய துணை அமைச்சர் மாளவியா

தேவை: திண்டுக்கல்லுக்கு அருகிலுள்ள ஒரு நவீன நூற்பாலைக்கு ஐந்து வருடம் அனுபவமுள்ள இளம் வயது எலக்ட்ரீஷியன்கள் தேவை. குறைந்தது ஆரம்ப சம்பளம் ரூ. 600/-

பெட்டி எண் 1447, C/o தினத்தந்தி, திருச்சி - 520001

# தமிழ் உணர்வு மிக்க செந்தமிழன்

கா. இராமனாதன்
அம்பத்தூர்-சென்னை-53

"மண்ணும் நகரத்தார் மாதஇதழ் வாழி"
பொன்னும் பொருளும் பொருந்தியே - நன்மையமாய்
செந்தமிழன் வாழி செழிப்புடனே - சீரோங்கி
கந்தனருளால் வாழிகாவ்.

- திருமுருக கிருபானந்த வாரியார்

திருவாளர்கள் திருமுருக கிருபானந்தவாரியார், முன்னாள் அமைச்சர் திரு. கே.ஏ.கே, தமிழ் தேசீயத்தலைவர், திரு. நெடுமாறன், தேவர் முரசு ஆசிரியர் திரு. ஆண்டியப்பத் தேவர், பேராசிரியர் திரு.முத்துச்சாமி, பேராசிரியர் திரு.லெ. இராமனாதன், திருச்சி விகேயென், குமுதம் பால்யூ, தமிழ் ஈழ மக்கள் விடுதலைக் கழகம். V. சந்திரன் C.T. [VINO] Y.நேசன் திராவிட கழகதலைவர் NR.சாமி, நகரத்தார்மலர் ஆசிரியர் இளங்கோவன், நகரத்தார்குரல் துணை ஆசிரியர் எல். சுந்தரம், லேனா.தமிழ்வாணன் மற்றும் பல சான்றோர் களால் பாராட்டப்பெற்றவர் செந்தமிழன்.

பசும்பொன் தேவர்திருமகன்மாவட்டம் சிவகெங்கைக்கு அருகில் உள்ள தெற்கு வட்டகையைச் சார்ந்த சோழ புரத்தை சேர்ந்தவர்" இவர் மாற்றூர்க் கோவில் உறையூர் பிரிவைச் சேர்ந்தவர், சிவகெங்கை வட்டார வாரியத் தலைவராக இருந்த சுப.க.அ. இராமனாதன் செட்டியார் அவர்களின் பேரன் செந்தமிழன். இவர் தந்தை சுப்பிரமணி யன் செட்டியார். தாயார் மீனாட்சி ஆச்சி. இவரது தாயார் மதுரையில் உள்ள மீனாட்சி அம்மன் ஆலயத்தினுள் மேலாடி வீதியில் கூ.க.அரு. பசுமடம் என்ற பெயரில் பசுமடம் நடத்திவரும் மூன்று பங்குதாரர்களில் ஒருவரான கீழப்பூங்குடி சித. அருணாசலம்செட்டியார் அவர்கள் மகள். இவரது சிறிய அய்யா சுப.க.அ. லெட்சுமணன் செட்டியார் அவர்கள் சிவகெங்கை ஊராட்சி ஒன்றியத்தின் முதல் பெருந்தலைவராகவும் தமிழ்நாடு சட்ட மேலவை உறுப்பின ராகவும் இருந்தவர்:

செந்தமிழன் சிவகங்கை அரசர் உயர்நிலைப்பள்ளியில் படிக்கும்பொழுது 1965ல் பொது இந்தி எதிர்ப்பு போராட்டம் தொடங்குவதற்கு முன்னாலேயே 1964 அக்டோபர் 30ல் இந்தி எதிர்ப்பு போராட்டம் நடத்தி பள்ளியிலிருந்து நீக்கப் பட்ட ஐவரில் ஒருவர். 1966-69ல் சிவகெங்கை மன்னர்

கல்லூரியில் தமிழ் பிரிவு புகுமுக வகுப்பில் சேர்ந்து தேர்வில் வெற்றி பெற்றார். பிறகு மதுரைக் கல்லூரியில் B.Com-ல் சேர்ந்து. B.Com.,ல் இந்தி இரண்டாம் பாடமாக இருப்பதால் B.Com., வேண்டாம் என்று எழுதிக் கொடுத்துவிட்டு B.A., சமூகஇயல் பிரிவில் சேர்ந்தார். B.A., சமூகஇயல் பேராசிரியர் இந்திக்குத் தான் வருங்காலம் உள்ளது. இந்தி படிக்கமாட்டேன் என்பது முட்டாள் தனம் என்று கூறியதை அடுத்து பேராசிரியருக்கும் செந்தமிழனுக்கும் ஏற்பட்ட கடுமையான வாக்குவாதத்தை அடுத்து மதுரை கல்லூரியிலிருந்து நீக்கப்பட்டார்.

அடுத்த ஆண்டு சிவகங்கை கல்லூரியில் B.A., பொருளியல் தமிழ்ப்பிரிவில் சேர்ந்தார். B.A.யில் முக்கியப் பாடம் துணைப்பாடங்களில் தேர்வு பெற்ற செந்தமிழன் வேற்று நாட்டு மொழியான ஆங்கிலத்தை படித்துக் கொள்வது குற்றமில்லை. ஆனால் வேற்று நாட்டு மொழியான ஆங்கிலத்தில் தேர்வு எழுதி வெற்றிபெற்றால் தான் பட்டம் என்ற நிலையை எதிர்த்து ஆங்கிலத் தேர்வு எழுதவில்லை. இதனால் பல்கலைகழகச் சட்டப்படி இவர் பட்டம் பெறவில்லை.

சென்னையில் வழக்குரைஞர் தமிழ்மகன் நடத்திய "ஒன்றேமுக்கால் பக்க ஏட்டில் அவருடன் இணைந்து பணியாற்றினார். 1976ல் உள்நாட்டு மடலில் கறுப்புசிவப்பு பார்டர்கட்டி பாரதிதாசனார் பாடலுடனும், பேரறிஞர் அண்ணா படத்துடன் அச்சிட்டு வெளியிட்டார். இந்த உள்நாட்டு மடலுக்கு தண்டக்கட்டணம் விதிக்கப்பட்டது. திருவள்ளுவர் கழகம் என்ற அமைப்பினை ஏற்படுத்தி அதன் வழியே தமிழ் உணர்வு மிக்க துண்டு வெளியீடுகளை வெளியிட்டார். அ.தி.மு.க. விலைவாசி உயர்வை எதிர்த்து அஞ்சல் நிலையம் முன்பு நடத்திய உண்ணாவிரதப் போராட்டத்தில் பங்கு கொண்டார். 1977ல் சிவகங்கையில் தனித்தமிழில் செந்தமிழ அங்காடி என்ற பெயரில் பல்பொருள் அங்காடியையும், பின் காந்தி வீதியில் நிலவு மனைப் பொருள் விற்பனையகம் என்ற பெயரில் பாத்திரக் கடையும் நடத்தினார். சிவகங்கை நகர், நாட்டுக்கோட்டை நகரத்தார் வரலாறு, பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம், புகழ் பெற்ற ஆலயங்கள் ஆகிய நூல்களையும் எழுதியுள்ளார். இவர் ஒரு சிறந்த தொகுப்பாளர் தற்பொழுது "நகரத்தார் இதழ் என்ற பெயரில் ஓர் திங்கள் இதழை கடந்த இரண்டு ஆண்டுகளாக நடத்திவருகின்றார் ஏப்ரல் 1989ல் "பூக்கள்" என்ற பெயரில் தனி இதழையும் வெளியிட உள்ளார்.

# காரைக்குடி நகரத்தார் நகரச் சிவன்கோவில் திருக்குட நீராட்டு விழா

10—4—89

தமிழகத்தில் வளர்ந்து வரும் நகரங்களில் ஒன்று காரைக்குடி. தமிழ் வளர்ச்சிக்கு துணை புரியும் காரைக்குடி பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டத்தைச் சார்ந்தது. அந்நகரின் பரப்பு 13.73 சதுர கிலோ மீட்டராகும். காரைக்குடி நகராட்சியான நாள் - 5—9—1928 (G O. NO: 2060) கி.பி. 1700 ஆண்டுகளுக்கு முன்னால் காரைச் செடிகள் மிகுந்த நகரமாக காரைக்குடி இருந்ததுயென்றும் ஆதலால் காரைக்குடி யென்றும் பெயர் வந்தது யென்று சிலரும், ஓம் என்ற சிவதத்துவத்தின் கீழ் ஓங்காரக்குடி என முதலில் அழைக்கப்பட்டு, பின் அது மருவி காரைக்குடி யென வந்தது யென்று பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரனும், காரைப்பாரைகள் அருகேயுள்ள குடியிருப்பு காரை மாநகர மென்றும், அக்காரணத்தினால் காரைக்குடி யென வந்தது யென்றும் லெ. ராமனாதன் அவர்களும் கூறுகின்றார்கள்.

பதினாறூர் வட்டகையைச் சார்ந்த காரைக்குடியில். பிள்ளையார்பட்டி கோவிலைச் சார்ந்தவர்களே அதிகமாக உள்ளனர். புள்ளிவிபரம் மதிப்பீடாக கீழே தரப்பட்டுள்ளது சிறிது கூட குறைய இருக்கலாம்

பிள்ளையார்பட்டி: 580, இளையாற்றக்குடி: 380, மாற்றூர்: 375, இலுப்பைக்குடி: 21, சூரக்குடி: 55, நேமம்: 235, இரணிக்கோவில் 130, வயிரவன்கோவில்: 389, வேலங்குடிக் கோவில்: 20,

நகரத்தார்கள் நிறைந்த காரைக்குடியில் நகரத்தார்களால், நகரின் மையத்தில் சுமார் நூற்றியிருபது ஆண்டுகளுக்கு முன்னுள் நகரச் சிவன் கோவில் அமைக்கப்பட்டது. 1872, 1953, 1974 ஆகிய ஆண்டுகளில் இக்கோவிலுக்கு குட முழுக்கு நீராட்டு விழா நடைபெற்றது. இக்கோவில் இராசகோபுரம் உட்பட 12 கோபுரங்கள் உள்ளன. இக்கோவிலின் இராசகோபுரம் சர்வதாரி வருடம் ஆவணி மீ 27உ (10-9-1881) திங்கட்கிழமை காரைக்குடி ராம. ஆத. ராம. ராமநாதன் செட்டியார் அவர்கள் உபயம் செய்யப்பட்டது. இக்கோவில் 42 வகையினைச் சார்ந்த (42 கரை

யினர்) 42 நபர்கள் பொறுப்பில் உள்ளது. மூன்று பேர் கொண்ட நிர்வாக குழுவின் கீழ் இக்கோவில் செயல் படுகிறது. டிரஸ்டிகளின் பதவிக்காலம் ஒவ்வொரு வருடமும் சித்திரை மாதம் முதல் நாள் தொடங்கி பங்குனியில் முடிவடையும் தற்பொழுது இவ்ஆலயத்தின் நடப்பு அரங்காவலராக சிவ. கி. லெ. கி. வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள் உள்ளார்கள். அறங்காவலர்களாக A. MR. நாகப்ப செட்டியார் அவர்களும், வயி. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களும் உள்ளனர். இவ்ஆலயத்தில் ஆடிப்பூரத்திருவிழா 10 நாட்கள் சிறப்பாக நடைபெறும். பங்குனி நான்காவது குடமுழுக்கு நீராட்டு விழா குழுத்தலைவராக சா. நா. அ. சா. அண்ணாமலை செட்டியார் அவர்களும், துணைத் தலைவராக ராம. வீர. பெரியகருப்பன் செட்டியார் அவர்களும் அ. திருநாவுக்கரசு செட்டியார் அவர்களும், SL. SN. சாத்தப்ப .செட்டியார் அவர்களும், MS. RM. மெய்யப்ப செட்டியார் அவர்களும், செயலாளர்களாக லெ.ச.மெ. முத்துராமன் செட்டியார் அவர்களும், மெ. மெ. சி. சேவு. மெய்யப்பச்செட்டியார் அவர்களும், பொருளாளராகவும் கதி. ராம. சோம அண்ணாமலை செட்டியார் அவர்களும் சிறப்பாக ஆலயப் பணிகளைச் செய்து மிகச் சிறப்பாக குடமுழுக்கு நீராட்டு விழாவை பங்குனி மாதம் 28ஆம் நாள் (10—4—89) திங்கள் கிழமை நான்காவது குடமுழுக்கு நீராட்டு விழாவை சிறப்பாக நடத்தினார்.

செய்திகள் தந்து உதவியவர்கள்

1. ஆலய நடப்பு நிர்வாக அறங்காவலர் சிவ. கி. லெ. கி. வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள்

2. குடமுழுக்கு நீராட்டு விழா குழு பொருளாளர் கதி. ராம. சோம. அண்ணாமலை செட்டியார் அவர்கள்

தொகுத்தவர் - சுப. செந்தமிழன்

---

திருத்தம்: மார்ச்சு-89 இதழில் கீழ்ச்சிவல்பட்டி என்ற கட்டுரையில் SRM School என்றுள்ளதை SMS School என்றும், விராமதியில் பொன்னழகி அம்மன் ஆலயம் என்றுள்ளதை பில்லவமங்கலத்தில் பொன்னழகி அம்மன் ஆலயம் உள்ளது என்றும் திருத்தி வாசித்துக் கொள்ள வேண்டுகிறது.



3—2—89 அன்று நடராசபுரத்தில் நகரத்தார் குரல் துணை ஆசிரியர் ஒக்கூர் திரு நா. லெ. சுந்தரம் அவர்களின் செல்வன் தங்கமணி Mscக்கும், நடராசபுரம் திரு. சிந. ஆறு. சே. நாகப்ப செட்டியார் அவர்களின் செல்வி மணிமேகலை (B.com)க்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

திருமணம்

1. வெற்றியூர் கதி. வெங்கிடாசலம் செட்டியார் அவர்களின் செல்வன் மீனாட்சிசுந்தரம் ME. AEROவுக்கும், அரண்மனை சிறுவயல் ஆரு.சினை. சுப்பிரமணியன் செட்டியார் அவர்களின் செல்வி மரகதவல்லி (B.A)க்கும் 16—3—89 அன்று அரண்மனை சிறுவயலில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

2. புலவர் மாமணி மா. முத்துராமன் அவர்களின் செல்வி மாணிக்கவல்லி என்ற சாந்திக்கும், சொ. சண்முகம் செட்டியார் அவர்கள் செல்வன் சொக்கலிங்கத்திற்கும் 10—2 89 அன்று மேலைச்சிவபுரியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

3. பி. அளகாபுரி ராம. மு. சோ. முத்தப்ப செட்டியார் செல்வி அழகம்மை B comக்கும் நற்சாந்துபட்டி பெ. ராம. ராம. சித. இராமன் செட்டியார் அவர்கள் செல்வர் காசி என்ற சிதம்பரம் B.com (CA)க்கும் 9—2—89 அன்று பி. அளகாபுரியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

4. 27-3-89 திங்கள்கிழமை அன்று கீழப்பூங்குடியில் சக்கந்தி திரு. உல. கண. உல. காசிவிசுவநாதன் செட்டியார் என்ற கண்ணப்பசெட்டியார் அவர்கள் செல்வன் கயிலாசத்திற்கும், கீழப்பூங்குடி திரு. கூ.கண.நா.சொ.கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள் செல்வி ராசேசுவரி என்ற மீனாட்சிக்கும் திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

5. சிவகங்கை ஓவெல் ஸ்டோர்ஸ் உரிமையாளர் (பாகனேரி) லெ. பழ. ராமனாதன் செட்டியார் அவர்கள் செல்வி நிர்மலாவிற்கும், நாட்டரசன்கோட்டை ஆத வீர. கண்ணப்ப செட்டியார் செல்வர் கண்ணப்பன் B.Aக்கும் பாகனேரியில் 27-3-89 திங்கட்கிழமை அன்று திருமணம் சிறப்பாக நடைபெற்றது.

நமது செய்திகள் - பகுதி இரண்டு

1. தேவகோட்டை நகரச்சிவன்கோவில் மண்டலாபிசேகவிழா விபவ பங்குனி 13உ (26-3-89) ஞாயிற்றுக்கிழமை சிறப்பாக நடைபெற்றது. மாலையில் சுவாமி திருவீதி உலாவும், இசை நிகழ்ச்சிகளும் சிறப்பாக நடைபெற்றது.

2. 5-4-89 அன்று இராமேசுவரத்தில் காசிவாசி மணி விழா சிறப்பாக நடைபெற்றது. பெருமைக்குரிய துலாவூர் ஆதினம் ஞானப்பிரகாச சுவாமிகளும், ராமகிருட்டிண பக்தர்களும் எழுந்தருளி பொன்னாடைபோர்த்தி பாராட்டுரை வழங்கினார்கள். செட்டிநாட்டுப் பெருமக்கள் 36பேர் பற்றி சேது. அருணாசலம்' சாத்தப்பன் உள்ளிட்ட குழந்தைகள் கவிதை பாடினார்கள்.

3. மதுரை டாக்டர் N.N. கண்ணப்பன் அவர்கள் பல நற்பணிகளை செய்துள்ளார். டாக்டர் N.N. கண்ணப்பன் அவர்களின் தொண்டு உள்ளத்தை, மருத்துவ சேவையைப் பாராட்டி ஜே. ஆர். சுரேந்திரன் என்பவர் டாக்டருக்கு "மருத்துவ சேவைக் களஞ்சியம்" என்ற பட்டத்தை வழங்கி சிறப்பித்துள்ளார்.

மாணவர்கள் கவனத்திற்கு

**நகரத்தார் புத்தகவங்கி:** நமது மாணவர்களுக்கு உதவும் வகையில் மதுரை நகரவிடுதியில் நகரத்தார் புத்தகவங்கி 2-10-88 முதல் சிறப்பாக செயலாற்றி வருகின்றது. இவ்வங்கியில் பல அரிய நூல்கள் உள்ளன. இவ்வங்கியில் உறுப்பினர் ஆகாமல் இருக்கும் மாணவ-மாணவிகள் உறுப்பினராகி பயன்பெறுமாறு பழ.இராமசாமி அவர்கள் கேட்டுக்கொள்கின்றார். நகரவிடுதியில் ஞாயிறுதோறும் மாலை 3to5 வரை புத்தகவங்கி செயல்படுகிறது. நுழைவுக் கட்டணம்

ரூ 10ம் காப்பீட்டுத்தொகை ரூ 30ம் செலுத்தி புத்தகவங்கியை பயன்படுத்திக் கொள்ளலாம். ஒவ்வொருவரும் இரண்டு புத்தகங்கள் எடுத்துச் செல்லலாம்.

**நுழைவுத் தேர்வுக்கு சிறப்புப் பயிற்சி வகுப்புகள்:** மருத்துவம், பொறியியல் ஆகியவற்றில் சேரும் மாணவர்களுக்கு நுழைவுத் தேர்விற்கு நகரத்தார் புத்தக வங்கியின் சார்பாக ஒருமாத பயிற்சி வகுப்புகள் நடைபெறவுள்ளது. பயிற்சி வகுப்புகள் காலம் மே 3 முதல் மே 31ம் தேதி வரையாகும். இந்த பயிற்சி வகுப்புகளில் கலந்து கொள்ள விரும்புபவர்கள் பிரதி ஞாயிறு மாலை 3to5 வரை பதிவுக் கட்டணம் ரூ 10 செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளவும். வெளியூர் நகரத்தார் மாணவர்களுக்கு தங்குவதற்கான இட வசதி வங்கியின் செலவில் செய்து தரப்படும். மேற்படி விபரங்களை நகரத்தார் புத்தக வங்கித் தலைவர் பழ. ராமசாமி தெரிவித்துள்ளார்.

**ஆலோசனைக் கூட்டம்:** 8—4—89 அன்று திருப்பரங்குன்றம் நகரவிடுதியில் நகரத்தார் புத்தகவங்கியின் சார்பில் நமது மாணவர்களுக்கு நுழைவுத் தேர்வு சிறப்புப் பயிற்சி வகுப்பு நடத்துவது பற்றி ஆலோசனைக் கூட்டம் நடைபெற்றது.

**பாராட்டு விழா:** திருப்பரங்குன்றம் நகரவிடுதியில் 8—4—89 அன்று தமிழக அரசு நல்லாசிரியர் விருது பெற்ற தியாகராசர் கல்லூரி முதல்வர் டாக்டர் சொக்கலிங்கம் அவர்களுக்கு பாராட்டு விழா நடைபெற்றது. டாக்டர் சுப. அண்ணாமலை அவர்கள். சொ. சொ. மீ. சுந்தரம் அவர்கள் மு. சி. நா. மாணிக்கம் அவர்கள் மற்றும் பலரும் பாராட்டிப் பேசினார்கள்.

**குழந்தை கவிஞர் அழ. வள்ளியப்பா இறுதி ஊர்வலம்:**

16—3—89 அன்று மதுரையில் காலமான குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களின் இறுதி ஊர்வலம் 17—3—89 ராயவரத்தில் நடைபெற்றது. பெருமளவில் எழுத்தாளர்கள் கலந்து கொண்டு மறைந்த கவிஞருக்கு அஞ்சலி செலுத்தினார்கள். கூட்டத்தில் பொற்கிழிக்கவிஞர் அரு. சோமசுந்தரம், கல்கி ஆசிரியர் இ. ராசேந்திரன் பேராசிரியர் ச.மெய்யப்பன், கவிஞர் செல்லகணபதி, பேராசிரியர் ந. சுப்பிரமணியன், எழுத்தாளர் ரேவதி, கந்தசாமி, மணி, மாயன் ஆகியோர் மறைந்த கவிஞருக்கு அஞ்சலி செலுத்தினர். மறைந்த கவிஞர் வள்ளியப்பா அவர்களுக்கு அஞ்சலி செலுத்தும் கூட்டம் 16-3-89 அன்று காரைக்குடி அரு. சோமசுந்தரனார் இல்லத்தில் நடைபெற்றது.

நினைவு நிரந்தர நிதி

அழ. வள்ளியப்பா நினைவாக ராயவரம் S.K.T காந்தி உயர்நிலைப்பள்ளியில் ஆண்டுதோறும் குழந்தை கவிஞரின் பாடல் ஒப்பித்தல் போட்டி நடத்திப் பரிசளிக்க ரூ. 1000 நிரந்தர நிதியாக பேராசிரியர் ச. மெய்யப்பன் வழங்குகின்றார். —அரு. சோ

## பொதுச் செய்திகள்

மார்ச்சு & ஏப்ரல் 1989.

தினமணி, தினத்தந்தி, தினகரன் ஆகிய நாளேடுகளின் செய்திகள் 15—3—89

"வீடு கடன் கணக்குத் திட்டம்" 1989 சூலை முதல் தொடக்கம் வீடுகட்ட கடன் கணக்குத்திட்டம் சூலை முதல் நாள்முதல் அமலுக்குவருகின்றது. இந்தியாவின் எந்தப்பகுதியிலும் வீடு இல்லர்தவர்க்ள் வயது வந்தவர்களாக இருந்தாலும், சிறுவர்களாக இருந்தாலும் இத்திட்டத்தின் கீழ் வங்கியில் கணக்கு தொடங்கலாம்.

இந்த திட்டத்தின் கீழ் சேமிக்கப்படும் தொகைக்கு ஆண்டுக்கு பத்து சதவிகிதம் வட்டி அளிக்கப்படும். ஆனால் 50,000 வரை அளிக்கப்படும் வீட்டுக் கடனுக்கு 10.5 சதம் வட்டி வசூலிக்கப்படும். ரூ.20,000 முதல் ரூ.30,000 லட்சம் வரையான கடனுக்கு 14.5 சதம் வட்டி வசூலிக்கப்படும். இந்தக் கடனை 15 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்த வேண்டும். கணக்கு துவங்கி ஐந்தாண்டுகளுக்கு பின்னர் வீடு கட்ட விரும்பாதவர்கள் டெபாசிட் தொகையை திரும்ப பெற்றுக் கொள்ளலாம். இத்திட்டத்தின் கீழ் அதிகபட்சம் ரூ 3 லட்சம் வீடு கட்ட கடன் வழங்கப்படும்.

18—3—89 அ) லோக்தள தலைவர் என். பகுகுணா அமெரிக்காவில் காலமானார்.

ஆ) சென்னை-யு.எஸ் நேரடி விமான சர்வீஸ் ஏப்ரல் 2உ முதல் தொடக்கம் ஏர் இந்தியா விமான சர்வீஸ் இந்த வசதியை செய்து தருகின்றது. சென்னையிலிருந்து 24 மணி நேரத்தில் யு.எஸ் போய் சேரலாம்.

இ) திருமலை-திருப்பதி தேவஸ்தானத்திற்கு 1988-89ம் ஆண்டில் 72.21 கோடி வருமானம் கிடைத்துள்ளது.

22—3—89 கட்டுப்பாட்டை நீக்கியதால் சிமெண்ட் விலை வீழ்ச்சி.

ஆ) சீனாவில் விரைவில் எதிர்க்கட்சிகள் முக்கியத்துவம் பெறும்.

தமிழ்த்தாய் கோவில் காரைக்குடி கம்பன் மணி மண்டபத்தில் கட்டப்பட்டு வரும் தமிழ்த்தாய் கோவில் விரைவில் பூர்த்தியாகி விடுமென்று காரைக்குடி கம்பன் கழக பொன் விழா நிறைவு திருநாள் விழாவில் பேசுகையில் பழ. பழனியப்பன் கூறினார்.

24—3—89 தமிழ்நாட்டில் உயர் அழுத்த மின்சாரத்தைப் பயன்படுத்தும் தொழிற்சாலைகளுக்கு வரும் ஏப்ரல் முதல் மின்கட்டணம் யூனிட்டுக்கு அதிகப்பட்சமாக 20 பைசா உயர்த்தப்படவுள்ளது. விவசாயம், வீட்டு உபயோகத்துக்கான மின் கட்டணம் உயர்த்தப்படவில்லை

25—3—89 தமிழ்நாடு சட்டப் பேரவையில் ரகளை.

25—3—89 தமிழ்நாடு அரசு பட்ஜெட்டில் சில முக்கிய அறிவிப்புகள்: இந்து சட்டத்தின் கீழ் ஆண் வாரிசுகளுக்கு பரம்பரைச்சொத்து தொடர்பாக உரிமை உள்ளதை போல் பெண் வாரிசுகளுக்கும் சொத்தில் சமஉரிமை வழங்க வழிசெய்ய இந்துவழி உரிமைச் சட்டத்தை திருத்தியமைக்க தமிழக அரசு முடிவு செய்துள்ளது. அதற்கான சட்ட வரைவு இந்தக் கூட்டத்தொடரில் வரவுள்ளது.

விபத்தில் இறந்தவர்கள் அனைத்து தரப்பினருக்கும் அந்த குடும்பத்தினருக்கு ரூபாய் பத்தாயிரம் வழங்கப்படும்.

குடும்பத்தலைவர் இறந்துவிட்ட நிலையில் திடீரென வருமான இழப்பு ஏற்படும் அந்த குடும்பத்தாருக்கு அரசின் மூலம் இரண்டாயிரம் வழங்கப்படும்.

31—3—89 ஏப்ரல் முதல் பணமின்றி செக் அளித்தால் செக் கொடுத்த நபருக்கு ஒருவருடம் சிறை தண்டனை அளிக்கப்படும் அல்லது செக் கொடுக்கப்பட்ட தொகை போல் இரு மடங்கு அபராதம் அல்லது இரண்டும் சேர்ந்து தண்டனை வழங்கப்படும். கொடுக்கப்பட வேண்டிய பணத்திற்காக தரப்படும் செக்குகள் மட்டுமே இந்த சட்டத்தில் அடங்கும். நன்கொடை, அன்பளிப்பு போன்றவைகளுக்காக செக் தரப்பட்டால் அவை இந்த சட்டத்திற்குட்படாது. போதிய பணம் கணக்கில் இல்லை என்ற காரணத்திற்காக செக் திருப்பி அனுப்பப்பட்டால் அடுத்த 15 நாட்களுக்குள் அதற்குரிய பணத்தை தரும்படி செக் கொடுத்தவரை கேட்க வேண்டும். அந்த 15 நாட்களுக்குள் செக் கொடுத்தவர் பணம் தராவிட்டால் இந்தச் சட்டத்தின்படி நடவடிக்கை எடுக்க முடியும். செக்கில் பணம் பெற வேண்டியவர் தான் இது பற்றி புகார் செய்ய வேண்டும்.

1—4—89 குழந்தைகளுக்கு சத்துணவுடன் ஜூன் 3ந்தேதி முதல் முட்டை வழங்கப்படும்.

4—4—89 பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டத்தின் பெயர் பசும்பொன் தேவர் திருமகன் மாவட்டம் என மாற்றப்பட்டுள்ளது.